# பள்ளத்தாக்கின் லீலி

## கிறிஸ்மஸ் புதுவருட ஆசீர்வாதம்





ஜனவரி JANUARY 2012

# சத்தியவேத திருச்சபையின்

# பள்ளத்தாக்கின் லீலி


வெளியிடுபவர்: பாஸ்டர் எலிசா லோகன்

ஆசிரியர்: சகோதரி நகோமி லோகன்

Tel:(416) 516-7701

Cell: (647) 405-8273 Fax: (416) 657-8273


இப்பத்திரிகையின் மூலம் நீங்கள் பெற்றுக்கொண்ட ஆசீர்வாதங்களை, சாட்சிகளை எங்களுக்கு எழுதுங்கள். அது மட்டுமல்ல இப்பத்திரிகைக்கு ஓய்வு கொடுக்க வேண்டாம். குறைந்தது பத்துப் பேருக்காவது வாசிக்கக் கொடுங்கள். மேலதிக பத்திரிகைகள் தேவையானாலும் எங்களுடன் தொடர்பு கொள்ளுங்கள். ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள். சத்தியவேத திருச்சபையின் ஒவ்வொரு ஊழியங்களுக்காகவும் ஜெபியுங்கள். விசேஷமாக இந்தப் பள்ளத்தாக்கின் லீலி பத்திரிகை தொடர்ந்து வெளிவரவும், இதனுடைய தேவைகள் சந்திக்கப்படவும், இதன் மூலமாக

அநேக மக்களை இரட்சிப்புக்குள் வழிநடத்தப்பட வேண்டும் என்றும் ஜெபியுங்கள்.


முகவரி

**Mailing Address**



**Pastor Elisha Logan**

**34 Ford St.**

**Toronto, Ontario Canada M6N – 3A1**



# ஆசிரியர் கடிதம்

அன்பராகிய இயேசுக் கிறிஸ்துவின் நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள்.

எங்கே பாவம் பெருகியதோ அங்கே கிருபை பெருகும் என்ற ஆண்டவரின் வார்த்தையின் படி கிருபை பெருகிய இடமாகிய நமது தேசமாகிய இலங்கை தேசத்துக்கு August 11 இல் இருந்து September 17 வரை சென்று வரத் தேவன் கிருபை செய்தார். கிட்டத்தட்ட 5 வாரங்கள் தேவனுடைய வார்த்தைகளை அநேகமான திருச்சபைகளில் பகிந்து கொள்ளத் தேவன் கிருபை செய்தார். யாழ்ப்பாணத்திலுள்ள அப்போஸ்தல சபைப் போதகர் Pastor இம்மானுவேல் அவர்கள் கூட்டங்களை ஒழுங்கு செய்திருந்தார். ஆனைக்கோட்டை, கொக்குவில், சுண்டுக்குளி, உடுவில், உரும்பிராய், சங்கானை, இளவாலை, சேந்தாங்குளம், பொலிகண்டி, வேலனை இன்னும் A.O.G சபைகளிலும் கந்தரோடை ஜீவ ஒளி சபையிலும் தேவன் தன்னுடைய வார்த்தைகளைக் கொடுக்கக் கிருபை செய்தார். அந்த இடத்திலே இசேுவின் நாமத்தைப் பெரிதும் அனுகூலமான கதவுகளைத் தேவன் திறந்தார். மேல் குறிப்பிட்ட சபைகளின் போதகர்கள் எல்லோருக்கும் இயேசுக் கிறிஸ்துவின் நாமத்தில் அன்புடன் வாழ்த்துதல் தெரிவித்துக்கொள்கிறேன்.

நம்முடைய தேசம் அழகான, செழிப்பான இயற்கை அழகுள்ள தேசம். அந்த தேசத்துக்காக ஜெபிப்போம். இலங்கை தேசத்து மக்களுக்கு கை கொடுப்போம். உதவி செய்வோம். இன்னும் போக்கு வரத்துக் காரியங்களில் ஊழியக்காரி சகோதரி Daisy அவர்கள் எனக்குமிகவும் உதவியாக இருந்தார்கள். தேவனால் அவர்களுக்கு பலன் பெருகுவதாக. கர்த்தருக்கு சித்தமாக இருந்தால் அடுத்த வருடம் குடும்பமாக நாம் நமது தேசத்துக்குச் செல்ல இருக்கிறோம். தேவன் நமக்கு உதவி செய்வாராக.

நமது சபையின் கிளைச் சபையாக 3638 Lawrence Ave East (Markham & Lawrence) இல் Novmber 6 ம் திகதியிலிருந்து தினமும் ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை 3.00 மணிக்கு தியான ஆராதனை நடைபெற்றுக் கொண்டு இருக்கிறது. நாங்கள் வலது புறத்திலும் இடது புறத்திலும் இடம் கொண்டு பெருகிகிறோம். மந்தை பெருகிறது போல தேவன் நம்மிடத்தில் மனுசரைப் பெருகப் பண்ணுவாராக. நமது போதகர் எலிசா லோகனும், சத்தியவேத திருச்சபை மக்களும் உங்களுக்கு வாழ்த்துதல் சொல்கிறார்கள்.

அன்புடன் அன்பரின் பணியில்

சகோதரி: நகோமி எலிசா லோகன்

(4) **இனித் தீங்கைக் காணாதிருப்பாய்**

பாஸ்டர் எலிசா லோகன்

மீட்பரும் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் சத்தியவேத திருச்சபை சார்பாக பள்ளத்தாக்கின் லீலி வாசகர்களுக்கு எனது முதல் கண் நன்றிகளைத் தொரிவித்துக் கொள்கிறேன். இந்த நாளிலும் என் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து உங்களுக்குக் கொடுக்கிற தேவ வார்த்தை "...இஸ்ரவேலின் ராஜாவாகிய கர்த்தர் (இயேசு) உன் நடுவிலே இருக்கிறார்; இனித் தீங்கைக் காணாதிருப்பாய்." (செப்பனியா 3:15)

கண்ணீரோடும், வேதனையோடும், பிரச்சனைகளோடும், வியாதிகளோடும் வாழ்கிற உங்களைப்பார்த்து ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து சொல்கிறார் இனி ஒரு தீங்கையும் உனக்கு வரவிடேன் என்று. கடந்த காலங்கள் உங்களுடைய வாழ்க்கை சூனியமாக இருந்திருக்கலாம். வேதனைக்கு மேல் வேதனை, வறுமை வாட்டியிருக்கலாம்! அல்லது அதி பயங்கரமான தீங்கு உங்களுக்கு வந்திருக்கலாம், அப்படிப்பட்ட இந்தத் தீங்கிலிருந்து எனக்கு விடுதலை இல்லையா? இந்த ஆபத்திலிருந்து விடுவிப்பார் இல்லையா என்று அங்கலாய்த்து வாழும் சகோதரனே! சகோதரியே! ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து உங்களை விடுவிக்கப் போதுமானவராக இருக்கிறார்.

தாவீது சொல்கிறார் "என் பெலனாகிய கர்த்தாவே, உம்மில் அன்பு கூருவேன். கர்த்தர் என் கன்மலையும், என் கோட்டையும், என் இரட்சகரும், என் தேவனும், நான் நம்பியிருக்கிற என் துருகமும், என் கேடகமும், என் இரட்சணியக் கொம்பும், என் உயர்ந்த அடைக்கலமுமாயிருக்கிறார். துதிக்குப் பாத்திரராகிய கர்த்தரை நோக்கிக் கூப்பிடுவேன்; அதனால் என் சத்துருக்களுக்கு நீங்கலாக்கி இரட்சிக்கப்படுவேன். மரணக்கட்டுக்கள் என்னைச் சுற்றிக் கொண்டது; துர்ச்சனப் பிரவாகம் என்னைப் பயப்படுத்தினது. பாதாளக்கட்டுக்கள் என்னைச் சூழ்ந்து கொண்டது; மரணக்கண்ணிகள் என்மேல் விழுந்தது, எனக்கு உண்டான நெருக்கத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டு, என் தேவனை நோக்கி அபயமிட்டேன்; தமது ஆலயத்திலிருந்து என் சத்தத்தைக் கேட்டார். என் கூப்பிடுதல் அவர் சந்நிதியால் போய், அவர் செவிகளில் ஏறிற்று" (சங்கீதம் 18:1-6)

தாவீதுக்கு நெருக்கம், ஆபத்து, போராட்டங்கள் வரும்போது தன் தேவனாகிய கர்த்தரையே நோக்கிக் கூப்பிட்டான். எங்கே இருந்து கூப்பிடுகிறான், தேவ சந்நிதானத்திலே நின்று தன் வேதனைகளைச் சொல்லி வேண்டுதல் செய்து கூப்பிடுகிறான். தாவீதினுடைய கூப்பிடுதல் தேவ சந்நிதியில் போய், அவர் செவிகளில் ஏறிற்று தொடர்ந்து சொல்கிறார். "மெய்யாய்த் தேவன் எனக்குச் செவிகொடுத்தார். என் ஜெபத்தின் சத்தத்தைக் கேட்டார். என் ஜெபத்தைத் தள்ளாமலும், தமது கிருபையை என்னைவிட்டு

(5) விலக்காமலும் இருந்த தேவனுக்கு ஸ்தோத்திரம் உண்டாவதாக" (சங் 66:19,20) அதுமட்டுமல்ல சங் 23:4 இல் சொல்கிறார் "நான் மரண இருளின் பள்ளத் தாக்கிலே நடந்தாலும் பொல்லாப்புக்குப் பயப்படேன்; தேவரீர் என்னோடே கூட இருக்கிறீர்; உமது கோலும் உமது தடியும் என்னைத் தேற்றும்." என்று கூறுகிறார். தாவீதுக்கு வந்த ஆபத்திலிருந்து விடுவித்த ஆண்டவர் உன்னையும் விடுவித்துக் காத்துக் கொள்வார்.

ஒரு நாள் ஆண்டவர் சோதோம் கொமோராவை அழிக்க வருகிறார். லோத்துவுக்குச் சொல்கிறார். "உன் ஜீவன் தப்ப ஓடிப்போ, பின்னிட்டுப் பாராதே; இந்தச் சமபூமியில் எங்கும் நில்லாதே; நீ அழியாதபடிக்கு மலைக்கு ஓடிப்போ என்றார்." (அதி 19:17) காரணம் அந்தப்பட்டணத்தவர்களின் பாவம் மிகக் கொடியதாய் இருந்தபடியால் அந்தப்பட்டணத்தை அழித்துத் தன் பிள்ளைகளாகிய லோத்தின் குடும்பத்தைக் காத்துக் கொள்ளச் சித்தங் கொண்டார். அந்தவேளையிலே லோத்து ஆண்டவரிடம் கேட்கிறார். "உமது கண்களில் உமது அடியேனுக்குக் கிருபைகிடைத்ததே; என் பிராணனைக் காக்கத் தேவரீர் எனக்குச் செய்த கிருபையைப் பெரிதாக விளங்கப்பண்ணினீர்; மலைக்கு ஓடிப்போக என்னால் முடியாது. தீங்கு என்னைத் தொடரும், நான் மரித்துப் போவேன். அதோ, அந்த ஊர் இருக்கிறதே, நான் அதற்கு ஓடிப்போகத் தக்கதாய் அது கிட்ட இருக்கிறது, சின்னதுமாய் இருக்கிறது; என் பிராணன் பிழைக்க நான் அங்கே ஓடிப்போகட்டும், இது சின்ன ஊர்தானே என்றான். அதற்கு அவர்; நீ கேட்டுக்கொண்ட ஊரை நான் கவிழ்த்துப் போடாதபடிக்கு, இந்த விஷயத்திலும் உனக்கு அநுக்கிரகம் பண்ணினேன், தீவிரமாய் அங்கே ஓடித் தப்பித்துக் கொள்; நீ அங்கே போய்ச் சேருமட்டும் நான் ஒன்றும் செய்யக் கூடாது என்றார்; ஆகையால் அந்த ஊர் சோவார் என்னப்பட்டது. லோத்து சோவாருக்குள் வரும்போது பூமியின் மேல் சூரியன் உதித்தது. அப்பொழுது கர்த்தர் சோதோமின் மேலும் கொமோராவின் மேலும், கர்த்தராலே வானத்திலிருந்து கந்தகத்தையும் அக்கினியையும் வருஷிக்கப் பண்ணி, அந்தப்பட்டணங்களையும், அந்தச் சமபூமியனைத்தையும், அந்தப் பட்டணங்களின் எல்லாக் குடிகளையும், பூமியின் பயிரையும் அழித்துப் போட்டார்." (ஆதி 19: 19-25)

தேவன் லோத்தையும், பிள்ளைகளையும் காத்துக்கொண்டார். லோத்தின் குடும்பத்துக்கு வரவிருந்த அந்தத் தீங்கிலிருந்து காக்கப்பட்டதன் காரணம் என்ன? ஆபிரகாம் தேவனிடத்தில் கேட்டுக்கொண்டார், ஆண்டவரே! "துன்மார்க்கனோடே நீதிமானையும் அழிப்பீரோ? பட்டணத்துக் குள்ளே ஒருவேளை ஐம்பது நீதிமான்கள் இருப்பார்கள், அதற்குள் இருக்கும் அந்த ஐம்பது நீதிமான்கள் நிமித்தம் இரட்சியாமல் அந்த ஸ்தலத்தை அழிப்பீரோ? துன்மார்க்கனோடே நீதிமானையும் சங்கரிப்பது உமக்குத்

(6) தூரமாயிருப்பதாக; நீதிமானையும் துன்மார்க்கனையும் சமமாய் நடப்பிப்பது உமக்குத் தூரமாயிருப்பதாக; சர்வலோக நியாயாதிபதி நீதிசெய்யாதிருப்பாரோ என்றான் அதற்குக் கர்த்தர் நான் சோதேமில் ஐம்பது நீதிமான்களைக் கண்டால், அவர்கள் நிமித்தம் அந்த ஸ்தலமுழுவதையும் இரட்சிப்பேன் என்றார். அப்பொழுது ஆபிரகாம் பிரதியுத்திரமாக; இதோ, தூளும் சாம்பலுமாயிருக்கிற அடியேன் ஆண்டவரோடே பேசத்துணிந்தேன். ஒருவேளை ஐம்பது நீதிமான்களுக்கு ஐந்துபேர் குறைந்திருப்பார்கள்; அந்த ஐந்து பேர் நிமித்தம் பட்டணம் முழுவதையும் அழிப்பீரோ என்றான். அதற்கு அவர்; நான் நாற்பந்தைந்து நீதிமான்களை அங்கே கண்டால், அதை அழிப்பதில்லை என்றார். அவன் பின்னும் அவரோடே பேசி; நாற்பது நீதிமான்கள் அங்கே காணப்பட்டாலோ என்றான். அதற்கு அவர்; நாற்பது நீதிமான்கள் நிமித்தம் அதை அழிப்பதில்லை என்றார். அப்பொழுது அவன்; நான் இன்னும் பேசுகிறேன். ஆண்டவருக்குக் கோபம் வராதிருப்பதாக; முப்பது நீதிமான்கள் அங்கே காணப்பட்டாலோ என்றான். அதற்கு அவர்; நான் முப்பது நீதிமான்களை அங்கே கண்டால், அதை அழிப்பதில்லை என்றார். அப்பொழுது அவன்; இதோ, ஆண்டவரோடே பேசத்துணிந்தேன்; இருபது நீதிமன்கள் அங்கே காணப்பட்டாலோ என்றான். அதற்கு அவர்; இருபது நீதிமான்கள் நிமித்தம் அதை அழிப்பதில்லை என்றார். அப்பொழுது அவன்; ஆண்டவருக்குக் கோபம் வராதிருப்பதாக; நான் இன்னும் இந்த ஒருவிசை மாத்திரம் பேசுகிறேன்; பத்து நீதிமான்கள் அங்கே காணப்பட் டாலோ என்றான். அதற்கு அவர்; பத்து நீதிமான்கள் நிமித்தம்அதை அழிப்பதில்லை என்றார். (ஆதியாகமம் 18:23-32)

இந்த லோத்து யார்? ஆபிரகாம் யார்? என்று சற்றுச் சிந்திப்போமாகில் லோத்து ஆபிரகாமின் சகோதரனாகிய ஆரானின் மகன். ஆபிரகாம், நாகோர், ஆரான் தேராகுவின் பிள்ளைகள். தகப்பனாகிய தேராகு மரிக்குமுன் மகனாகிய ஆரான் மரித்துப் போனான். இதனால் ஆபிரகாம் தன் சகோதரனின் மகனாகிய லோத்தின் மேல் அன்பு வைத்திருந்தான். இந்த அன்பின் நிமித்தமாக இருவரும் பிரியாதிருந்தார்கள். பின்பு ஆபிரகாமும் லோத்தும் பெத்தேலுக்குப் போய், அங்கிருந்து பஞ்சத்தின் நிமித்தம் எகிப்துக்குப் போனார்கள். திரும்பவும் பெத்தேலுக்கு வந்து, அங்கே தங்கியிருந்தார்கள். இவ்விருவருக்கும் ஏராளமான ஆட்டு மந்தைகள் இருந்ததினால், ஆபிரகாமின் மேய்ப்பருக்கும் லோத்தின் மேய்ப்பருக்கும் இடையில் சண்டை உண்டாயிற்று. இதனால் ஆபிரகாமுக்கும் லோத்துக்கும் இடையில் பிரிவினை உண்டாயிற்று. லோத்து ஒரு செழிப்பான பட்டணமாகியசோதோமைத் தெரிந்து கொண்டு அங்கே போய்க் குடியிருந்தான். அந்த சோதோம் பட்டண மக்கள் பாவம் நிறைந்தவர்களாக வாழ்ந்து வந்தார்கள். அந்தப்பட்டணத்தை ஆண்டவர் அழிக்கச் சித்தம் கொண்டார். அந்தப்பட்டணத்தில் நீதிமான்கள் யாருமே இல்லை. ஆனால் அந்தப் பட்டணத்தில் தான் லோத்தும் வாழ்ந்து வருகிறார். வாக்குத்தத்தத்தின்

(7) பிள்ளைகளாகிய ஆபிரகாமின் நிமித்தமாக, லோத்துக்கு வரவிருந்த எல்லாத் தீங்கிலிருந்தும் காக்கப்பட்டார். தேவன் ஆபிரகாமின் சத்தத்துக்குச் செவிசாய்த்து எந்தத் தீங்கையும் காணதபடிக்கு லோத்தைக் காத்துக் கொண்டார். அதேபோல உங்கள் வாழ்க்கையிலும் பலவிதமான தீங்குகள் வந்திருக்கலாம், அந்தத் தீங்கிலிருந்து தப்பவேண்டுமாயின் ஆண்டவருக்குள் நிலைத்து நிற்கும், உறுதியுள்ள, உண்மையுள்ள சகோதரனிடமோ அல்லது சகோதரியிடமோ உங்கள் ஆவிக்குரிய ஜீவியத்தை வைத்துக் கொள்ளுங்கள். ஏனெனில் அவர்கள் தேவனால் ஆசீர்வதிக் கப்பட்டவர்கள். அவர்களுடைய ஜெபங்களைத் தேவன் கேட்கிறவராக இருக்கிறார்.

மேலும் இஸ்ரவேலர்கள் எகிப்திலே அடிமைப்பட்டு, வேதனைப்பட்டு தவித்தபோது ஆண்டவர் அவர்களை இரட்சிப்பதற்காக மோசேயை எழுப்பினார். மோசே அவர்களைப் பார்வேன் கைக்குத் தப்புவித்து, பாலும் தேனும் ஓடுகிற கானான் தேசத்துக்கு அழைத்துவரும் வழியிலே, மோசே சீனாய் மலையில் தேவனோடு பேசிக்கொண்டு இருக்கும் வேளையில், “மோசே மலையிலிருந்து இறங்கிவரத் தாமதிக்கிறதை ஜனங்கள் கண்டபோது, அவர்கள் ஆரோனிடத்தில் கூட்டங்கூடி, அவனை நோக்கி; எகிப்திலிருந்து எங்களை அழைத்துக் கொண்டுவந்த அந்த மோசேக்கு என்ன சம்பவித்ததோ அறியோம்; ஆதலால் நீ எழுந்து, எங்களுக்கு முன் செல்லும் தெய்வங்களை எங்களுக்காக உண்டுபண்ணும் என்றார்கள். அதற்கு ஆரோன்; உங்கள் மனைவிகள் குமாரர் குமாரத்திகளுடைய காதுகளில் இருக்கிற பொன்னணிகளைக் கழற்றி, என்னிடத்தில் கொண்டு வாருங்கள் என்றான். ஜனங்கள் எல்லாரும் தங்கள் காதுகளில் இருந்த பொன்னணி களைக் கழற்றி, ஆரோனிடத்தில் கொண்டு வந்தார்கள். அவர்கள் கையிலிருந்து அவன் அந்தப் பொன்னை வாங்கி, சிற்பக் கருவியினால் கருப்பிடித்து, ஒரு கன்றுக்குட்டியை வார்ப்பித்தான். அப்பொழுது அவர்கள்; இஸ்ரவேலரே, உங்களை எகிப்து தேசத்திலிருந்து அழைத்துக் கொண்டு வந்த உங்கள் தெய்வங்கள் இவைகளே என்றார்கள்.” ( யாத்திராகமம் 32:1-4)

இந்த இஸ்ரவேலர்கள் ஆண்டவர் செய்த எல்லா நன்மைகளையும் மறந்து, தங்களுக்கென்று காதுகள் கைகளிலிருந்த நகைகளைக் கழற்றி, அதை உருக்கி கன்றுக்குட்டியை உண்டுபண்ணி, அதை அறியாமல் வணங்கினார்கள். இதனால் தேவ கோபம் அவர்கள் மேல் இறங்கியது. எனக்கன்பான தேவ பிள்ளைகளே! உங்களுடைய வாழ்க்கையில் சமாதானம், சந்தோஷம், ஆசீர்வாதம் வரவேண்டுமாயின். தேவனுடைய வார்த்தைகளையும் அவருடைய பிரமாணங்களையும் நாம் மறந்துவிடக் கூடாது. ஏனெனில் யாத்திராகமம் 20: 2-6 வரை பார்க்கும்போது, “உன்னை அடிமைத்தன வீடாகிய எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உன் தேவனாகிய கர்த்தர் நானே. என்னையன்றி வேறே தேவர்கள் உண்டாயிருக்கவேண்டாம்.

(8) மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின் கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம். நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம்; உன் தேவனாகிய கர்த்தராயிருக்கிற நான் எரிச்சலுள்ள தேவனாயிருந்து, என்னைப் பகைக்கிறவர்களைக் குறித்துப் பிதாக்களுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறேன். என்னிடத்தில் அன்பு கூர்ந்து, என் கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கோ ஆயிரம் தலைமுறைமட்டும் இரக்கம் செய்கிறவராயிருக்கிறேன்.” இப்படிப்பட்ட பிரமாணங்களை, தேவனுடைய கட்டளைகளை இஸ்ரவேல் ஜனங்கள் மீறினார்கள். எல்லாத் தீங்குக்கும் விலக்கி விடுவித்துக் காத்த தேவனை மறந்து விட்டார்கள்.

ஆண்டவர் மோசேக்குச் சொல்கிறார் யாத்திரகமம் 32: 7-10 வரை “.....நீ இறங்கிப்போ; எகிப்து தேசத்திலிருந்து நீ நடத்திக் கொண்டுவந்த உன் ஜனங்கள் தங்களைக் கெடுத்துக் கொண்டார்கள். அவர்களுக்கு நான் விதித்த வழியை அவர்கள் சீக்கிரமாய் விட்டு விலகினார்கள்; அவர்கள் தங்களுக்கு ஒரு கன்றுக்குட்டியை வார்ப்பித்து, அதைப் பணிந்து கொண்டு, அதற்குப் பலியிட்டு; இஸ்ரவேலரே, உங்களை எகிப்து தேசத்திலிருந்து அழைத்துக் கொண்டுவந்த உங்கள் தெய்வங்கள் இவைகளே என்று சொன்னார்கள் என்றார். பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி; இந்த ஜனங்களைப் பார்த்தேன்; இவர்கள் வணங்காக்கழுத்துள்ள ஜனங்கள். ஆகையால் என் கோபம் இவர்கள் மேல் மூளவும், நான் இவர்களை அழித்துப் போடவும் நீ என்னை விட்டுவிடு; உன்னை ஒரு பெரிய ஜாதியாக்குவேன் என்றார்; ஆண்டவருடைய கோபம் இஸ்ரவேலர் மேல் மூண்டது அவர்களுக்குத் தீங்கு ஏற்பட்டது. ஆனால் மோசேயோ அந்த ஜனங்களுக்காக பரிதபிக்கிறான். “....கர்த்தாவே, தேவரீர் மகா பலத்தினாலும் வல்லமையுள்ள கையினாலும் எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உம்முடைய ஜனங்களுக்கு விரோதமாக உம்முடைய கோபம் பற்றியெரிவ தென்ன? மலைகளில் அவர்களைக் கொன்றுபோடவும், பூமியின் மேல் இராதபடிக்கு அவர்களை நிர்மூலமாக்கவும், அவர்களுக்குத் தீங்கு செய்யும் பொருட்டே அவர்களைப் புறப்படப்பண்ணினார் என்று எகிப்தியர் சொல்வானேன்? உம்முடைய போபத்தின் உக்கிரத்தை விட்டுத் திரும்பி, உமது ஜனங்களுக்குத் தீங்கு செய்யாதபடிக்கு, அவர்கள் மேல் பரிதாபங் கொள்ளும். உமது தாசனாகிய ஆபிரகாமையும் ஈசாக்கையும் இஸ்ரவேலையும் (யாக்கோபையும்) நினைந்தருளும்; உங்கள் சந்ததியை வானத்து நட்சத்திரங்களைப் போலப் பெருகப்பண்ணி, நான் சொன்ன இந்தத் தேசம் முழுவதையும் உங்கள் சந்ததியார் என்றைக்கும் சுதந்தரித்துக் கொள்ளும்படிக்கு, அவர்களுக்குக் கொடுப்பேன் என்று உம்மைக் கொண்டே

அவர்களுக்கு ஆணையிட்டுச் சொன்னீரே என்று கெஞ்சிப் பிரார்த்தித்தான். அப்பொழுது கர்த்தர் தமது ஜனங்களுக்குச் செய்ய நினைத்த தீங்கைச் செய்யாதபடிக்குப் பரிதாபங் கொண்டார்." (யாத்திராகமம் 32: 11-14) மோசே தன் ஜனங்களுக்காக வேண்டுதல் செய்தபோது, மோசேயின் விண்ணப்பத்தைக் கேட்ட ஆண்டவர் இஸ்ரவேல் மக்களுக்குத் தீங்கு வராமல் காத்துக் கொண்டார்.

இன்று ஆண்டவராகிய இயேசுவை அறிந்தவர்களுக்குப் பலவிதமான தீங்குகள், பாடுகள் வருவதற்குக் காரணம் என்ன? நாம் நெகேமியா 13:15-22 வரை வாசித்துப் பார்ப்போமாகில் "அந்த நாட்களில் நான் யூதாவிலே ஓய்வு நாளில் சிலர் ஆலைகளை மிதிக்கிறதையும், சிலர் தானியப் பொதிகளைக் கழுதைகள் மேல் ஏற்றிக் கொண்டு வருகிறதையும், திராட்சரசம், திராட்சப்பழம் அத்திப்பழம் முதலானவைகளின் பற்பல சுமைகளை ஓய்வு நாளிலே எருசலேமுக்குக் கொண்டு வருகிறதையும் கண்டு, அவர்கள் தின்பண்டம் விற்கிற நாளைப்பற்றி அவர்களைத் திடசாட்சியாய்க் கடிந்து கொண்டேன். மீனையும் சகலவித சரக்குகளையும் கொண்டு வந்து, ஓய்வு நாளிலே யூதா புத்திரருக்கும் எருசலேமில் இருக்கிறவர்களுக்கும் விற்கிற சில தீரியரும் உள்ளே குடியிருந்தார்கள். ஆகையால் நான் யூதாவின் பெரியவர்களைக் கடிந்து கொண்டு; நீங்கள் ஓய்வு நாளைப் பரிசுத்தக் குலைச்சலாக்குகிற இந்தப் பொல்லாத செய்கையென்ன? உங்கள் பிதாக்கள் இப்படிச் செய்ததினாலல்லவா, நமது தேவன் நம்மேலும் இந்த நகரத்தின் மேலும் இந்தத் தீங்கையெல்லாம் வரப்பண்ணினார்; நீங்களோ வென்றால் ஓய்வு நாளைப் பரிசுத்தக் குலைச்சலாக்குகிறதினால், இஸ்ரவேலின் மேலிருக்கிற உக்கிரத்தை அதிகரிக்கப் பண்ணுகிறீர்கள் என்று அவர்களுக்குச் சொன்னேன். ஆகையால் ஓய்வு நாளுக்கு முன்னே எருசலேமின் பட்டண வாசலில், மாலைமயங்கும் போது, கதவுகளைப் பூட்டவும், ஓய்வு நாள் முடியுமட்டும் அவைகளைத் திறவாதிருக்கவும் வேண்டுமென்று கட்டளை யிட்டு, ஓய்வுநாளிலே ஒரு சுமையும் உள்ளே வராதபடிக்கு வாசலண்டையிலே என் வேலைக்காரரில் சிலரை நிறுத்தினேன். அதினால் வர்த்தகரும், சகலவித சரக்குகளை விற்குகிறவர்களும், இரண்டொருதரம் எருசலேமுக்குப் புறம்பே இராத்தங்கினார்கள். அப்பொழுது நான் அவர்களைத் திடசாட்சியாய்க் கடிந்து கொண்டு, நீங்கள் அலங்கத்தண்டையிலே இராத்தங்குகிறது என்ன? நீங்கள் மறுபடியும் இப்படிச் செய்தால், உங்கள் மேல் கைபோடுவேன் என்று அவர்களோடே சொன்னேன்; அதுமுதல் அவர்கள் ஓய்வுநாளில் வராதிருந் தார்கள். ஓய்வு நாளைப் பரிசுத்தமாக்கும் படிக்கு, உங்களைச் சுத்தம் பண்ணிக்கொண்டு வாசலைக் காக்கவாருங்கள் என்று லேவியருக்கும் சொன்னேன். என் தேவனே, இதைக்குறித்து நீர் என்னை நினைந்தருளி, உம்முடைய மிகுந்த கிருபையின்படி எனக்கு இரங்குவீராக." மேலே குறிப்பிட்டுள்ள தேவனுடைய வார்த்தைகளை நாம் முக்கியமாக கவனத்தில்

 கொண்டுவரவேண்டியவர்கலாக இருக்கவேண்டும். அனேகருடைய வாழ்க்கையிலே ஓய்வு நாட்களில் தேவனை மறந்து, ஆலயத்துக்குச் செல்வதை விட்டு, எங்களை வழிநடத்தும் அன்பு இரக்கம் கொண்ட ஆண்டவரை மறந்து, ஆலயத்தில் ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவை ஆராதிக்க வேண்டிய ஓய்வு நாளை விட்டு, தேவனுக்கு முதலிடம் கொடுக்காமல் வேலைகளிலும், உலகக் களியாட்டிலும், உலக இன்பத்திலும், விருந்து வீடு, திருமண வீடு, இப்படிப்பட்ட வைபவங்களில் கலந்து கொண்டு ஓய்வு நாளைப் பரிசுத்தக் குலைச்சலாக்குகிறார்கள். இதனால் தேவனுக்கு எரிச்சல் உண்டாகிறது. ஆண்டவராகிய இயேசு சொல்கிறார். மத்தேயு 6:33 இல் "முதலாவது தேவனுடைய ராஜ்யத்தையும் நீதியையும் தேடுங்கள், அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக் கூடக் கொடுக்கப்படும்."

அன்று இஸ்ரவேலர் உண்மைத் தேவன் யார் என்பதை அறிந்திருந்தும் தேவன் கொடுத்த பிரமாணங்களை மீறினார்கள். அவ்வேளையிலே கர்த்தருடைய கோபம் அவர்கள் மேல் வந்தது. தீங்கைக் காணாத மக்கள் தீங்கை அனுபவித்தார்கள். அதேபோல இன்றும் அநேக ஜனங்கள் ஆண்டவராகிய இயேசுவை அறிந்தும், இரட்சிப்படைந்தும், தேவ வார்த்தையில் உறுதிப்பட்டும் தங்கள் ஆவிக்குரிய வாழ்க்கையில் உறுதிப்படாமல் வாழ்ந்து கொண்டு வருகிறார்கள். இதனால் அவர்களுடைய வாழ்க்கையில் பிரச்சனைக்கு மேல் பிரச்சனை, வேதனை, பிரிவுகள், தீங்குகள் வந்தவண்ணமாகவே இருக்கிறது. இதனால் சொல்கிறார்கள் நான் ஆண்டவருக்குள் வந்தபின்பு தான் பாடுகள் அதிகம் என்று. அதினால் அல்ல பாடுகள். தேவனுடைய பிரமாணத்தை மீறும் போது பாடுகள் வருகிறது. நம்முடைய வாழ்க்கையில் ஆசீர்வாதம் வேண்டுமாயின் தேவனுக்குக் கொடுக்க வேண்டிய ஓய்வு நாள், தேவனுக்குக் கொடுக்கவேண்டிய நேரம். ஆண்டவர் சொன்னார் அதிகாலையில் என்னைத் தேடுகிறவர்கள் என்னைக் கண்டடைவார்கள் என்று. ஆண்டவர் நம்மோடு இருந்தால் நம்முடைய வாழ்க்கையில் உபத்திரவம் இல்லை. ஆண்டவர் சொன்னார் நான் ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனும் என்று. காரணம் ஆண்டவருடைய சொல்லுக்கு நம்முடைய முப்பிதாக்கள் கீழ்ப்படிந்து இருந்தார்கள். அதனால் அவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டார்கள்

அப்போஸ்தலனாகிய பேதுரு சொல்கிறார். "ஒருவன் கிறிஸ்தவனா யிருப்பதினால், பாடுபட்டால் வெட்கப்படாமலிருந்து, அதினிமித்தம் தேவனை மகிமைப்படுத்தக் கடவன். நியாயத்தீர்ப்பு தேவனுடைய வீட்டிலே துவங்குங் காலமாயிருக்கிறது; முந்தி நம்மிடத்திலே அது துவங்கினால் தேவனுடைய சுவிசேஷத்துக்குக் கீழ்ப்படியாதவர்களின் முடிவு என்னமாயிருக்கும்." (1 பேதுரு 4: 16,17) நாம் ஒவ்வொருவரும் நியாயப் பிரமாணத்துக்குக் கீழ்ப் படிந்தவர்களாயும், சாட்சி உள்ளவர்களாயும் வாழவேண்டும். யோபு என்னும் தேவ பக்தன் சொல்கிறார்.

(11) "தீங்கு புழுதியிலிருந்து உண்டாகிறதுமில்லை; வருத்தம் மண்ணிலிருந்து முளைக்கிறதுமில்லை." (யோபு 5:6) அது யாரால் வருகிறது மனிதனுடைய நினைவுகளாலும், அவனுடைய சிந்தனைகளாலும். ஆகவே தான் ஆண்டவர் சொன்னார். "என் நினைவுகள் உங்கள் நினைவுகள் அல்ல; உங்கள் வழிகள் என் வழிகளுமல்லவென்று கர்த்தர் சொல்கிறார். பூமியைப் பார்க்கிலும் வானங்கள் எப்படி உயர்ந்திருக்கிறதோ, அப்படியே உங்கள் வழிகளைப் பார்க்கிலும் என் வழிகளும், உங்கள் நினைவுகளைப் பார்க்கிலும் என் நினைவுகள் உயர்ந்திருக்கிறது." (ஏசாயா 55: 8,9) மனிதனுடைய வழிகள் மாறுபாடானவைகள். அதிலே நடப்பதற்கு தேவன் பிரியப்படுவதில்லை. அவர் தன்னுடைய நித்திய வழியிலே எம்மை வழிநடத்த வல்லவராக இருக்கிறார். ஆகவேதான் பிரசங்கி சொல்கிறார். "கற்பனையைக் கைக்கொள்ளுகிறவன் ஒரு தீங்கையும் அறியான்." (பிரசங்கி 8: 5) ஏசாயா தீர்க்கதரிசி சொல்கிறார். "தீங்கு உன்மேல் வரும், அது எங்கேயிருந்து உதித்ததென்று நீ அறியாய்; விக்கினம் உன்மேல் வரும், நீ அதை நிவிர்த்தி யாக்கமாட்டாய்; நீ அறியாதபடிக்குச் சடிதியாய் உண்டாகும் பாழ்க்கடிப்பு உன் மேல் வரும்." (ஏசாயா 47:11) இப்படிப்பட்ட தீங்குகள், உபத்திரவங்கள் எங்கே இருந்து வருகிறது என்று தேவன் அறிவார். தேவனை அண்டிக்கொண்டு, தேவனோடு உடன்படிக்கை பண்ணிக் கொண்டு வாழ்பவர்கள் பாக்கிய வான்கள். வேதம் சொல்கிறது நீதிமான் மடிந்து போகிறான், ஒருவரும் அதை மனதில் வைக்கிறதில்லை; புத்திமான் எடுத்துக் கொள்ளப்படுகிறான், ஆனாலும் தீங்கு வராததுக்கு முன்னே நீதிமான் எடுத்துக் கொள்ளப் படுகிறான் என்பதைச் சிந்திப்பார் இல்லை. நேர்மையாய் நடந்தவர்கள் சமாதானத்துக்குள் பிரவேசித்து, தங்கள் படுக்கைகளில் இளைப்பாறுகிறார்கள்.

எரேமியா 18:1-10 வரை பார்ப்போமாகில் "கர்த்தரால் எரேமியாவுக்கு உண்டான வசனம்; நீ எழுந்து, குயவன் வீட்டுக்குப்போ; அங்கே என் வார்த்தைகளை உனக்குத் தெரிவிப்பேன் என்றார். அப்படியே நான் குயவன் வீட்டுக்குப் போனேன்; இதோ, அவன் திரிகையிலே வனைந்து கொண்டி ருந்தான். குயவன் வனைந்து கொண்டிருந்த மண்பாண்டம் அவன் கையிலே கெட்டுப் போயிற்று; அப்பொழுது அதைத் திருத்தமாய்ச் செய்யும் படிக்கு, தன் பார்வைக்குச் சரியாய்க் கண்டபடி குயவன் அதைத் திரும்ப வேறேபாண்டமாக வனைந்தான்.அப்பொழுது கர்த்தருடைய வசனம் எனக்கு உண்டாகி, அவர்; இஸ்ரவேல் குடும்பத்தாரே, இந்தக் குயவன் செய்தது போல நான் உங்களுக்குச் செய்யக்கூடாதோ என்று கர்த்தர் சொல்லுகிறார். இதோ, இஸ்ரலேல் வீட்டாரே, களிமண் குயவன் கையில் இருக்கிறது போல நீங்கள் என் கையில் இருக்கிறீர்கள். பிடுங்குவேன், இடிப்பேன், அழிப்பேன் என்று நான் ஒரு ஜாதிக்கு விரோதமாகவும், ஒரு ராஜ்யத்துக்கு விரோதமாகவும் சொன்ன மாத்திரத்தில், நான் விரோதமாய்ப் பேசின அந்த ஜாதியார் தங்கள் தீங்கைவிட்டுத் திரும்பினால், நானும் அவர்களுக்குச் செய்ய நினைத்த

(12) தீங்கைச் செய்யாதபடிக்கு, மனம் மாறுவேன். கட்டுவேன், நாட்டுவேன் என்றும், ஒரு ஜாதியையும் ஒரு ராஜ்யத்தையும் குறித்து நான் சொல்லுகிறது முண்டு. அவர்கள் என் சத்தத்தைக் கேளாமல், என் பார்வைக்குப் பொல்லாப் பானதைச் செய்வார்களானால், நானும் அவர்களுக்கு அருள் செய்வேன் என்று சொன்ன நன்மையைச் செய்யாதபடிக்கு, மனம் மாறுவேன்.''

கர்த்தர் இரக்கமும் மன உருக்கமும் நீடிய சாந்தமும் உள்ள தேவன். ஒருநாள் நினிவே பட்டண மக்களுடைய பாவங்கள் தேவ சமூகத்தில் எட்டியது. ஆண்டவர் யோனாவுக்குச் சொன்னார். நீ எழுந்து போய் மாகா நகரமாகிய நினிவேய்க்குப் போய், அதற்கு விரோதமாய் பிரசங்கி, அவர்களுடைய அக்கிரமம் என் சமூகத்தில் வந்து எட்டியது. ஆனாலும் யோனாவுக்கு பலவிதமான பாடுகளின் மத்தியிலே, அந்த நினிவேக்குச் சென்று, நகரத்தில் பிரவேசித்து, ஒருநாள் பிரயாணம் பண்ணி; இன்னும் நாற்பது நாள் உண்டு, அப்பொழுது நினிவே கவிழ்க்கப்பட்டுப்போம் என்று கூறினான். அப்பொழுது நினிவேயிலுள்ளஜனங்கள் தேவனை விசுவாசித்து, உபவாசஞ் செய்யும்படிக் கூறினார்கள்; பெரியோர் முதல் சிறியோர் மட்டும் இரட்டுடுத்திக் கொண்டார்கள். இந்தச் செய்தி நினிவேயின் ராஜாவுக்கு எட்டினபோது, அவன் தன் சிங்காசனத்தைவிட்டு எழுந்து, தான் உடுத்தி யிருந்த உடுப்பைக் கழற்றிப்போட்டு, இரட்டை உடுத்திக்கொண்டு, சாம்பலிலே உட்கார்ந்தான். அதுமட்டுமல்ல ராஜாவின் கட்டளைக்கிணங்க மனுஷரும் மிருகங்களும், மாடுகளும் ஆடுகளும் ஒன்றும் ருசிபாராதிருக்கவும், மேயாமலும் தண்ணீர் குடியாமலும் இருக்கவும் கட்டளையிட்டான். இவர்களுடைய பூரண மனந்திரும்புதலை தேவன் கண்டார். நான் அழிப்பேன், இடிப்பேன், பிடுங்குவேன் என்ற தேவன் அவர்களுக்கு வர இருந்த தீங்கிலிருந்து காப்பாற்றினார்.

வேதப்புத்தகத்திலே பல இடங்களிலே நாம் காணக் கூடியதாக இருக்கிறது. யோனா சொல்கிறார். "நீர் இரக்கமும் மன உருக்கமும் நீடிய சாத்தமும் மிகுந்த கிருபையுமுள்ளவரும், தீங்குக்கு மனஸ்தாபப் படுகிறவருமான தேவனென்று அறிவேன்.'' (யோனா 4: 2) யாத் 34: 5,6 இல் சொல்லப்படுகிறது "கர்த்தர்; இரக்கமும், நீடியசாந்தமும், மகா தயையும், சத்தியமுமுள்ள தேவன். ஆயிரம் தலைமுறைகளுக்கும் இரக்கத்தைக் காக்கிறவர்.'' தொடாந்தும் பார்ப்போமாகில் தாவீது சொல்கிறார். சங்கீதம் 86:15 சங்கீதம் 103:8 லும் "ஆண்டவரே நீர் மனவுருக்கமும், இரக்கமும், நீடிய பொறுமையும், பூரண கிருபையும், சத்தியமுள்ள தேவன்.'' என்று. உபாகமம் 4: 31 இல் பார்க்கிறோம் " உன் தேவனாகிய கர்த்தர் இரக்கமுள்ள தேவனாயிருக்கிற படியால், அவர் உன்னைக் கைவிடமாட்டார். உன் பிதாக்களுக்குத் தாம் ஆணையிட்டுக் கொடுத்த உடன்படிக்கையை மறக்கவுமாட்டார்.'' என்று. எனக்கன்பான சகோதரனே! சகோதரியே! இன்று

(13) உங்கள் வாழ்க்கையில் பிரச்சனைகளோடும், பெரிய ஆபத்தோடும், பிரிவினைகளோடும் இருக்கலாம். உன் எல்லாத் தீங்கிலிருந்தும் விடுதலை கொடுக்கும் ஆண்டவர் ஒருவர் உண்டு. அவர் உன்னை ஆற்றித் தேற்ற வல்லவராக இருக்கிறார். ஒருவனை , அவன் தாய் தேற்றுவது போல தேற்றி அரவணைத்து, ஆறுதல்தரக் காத்திருக்கிறார். ஒரு வேளை நீங்களும் குயவன் கையில் சிக்குண்டு உடைந்த பாத்திரமாக இருக்கலாம். உன் உடைந்த பாத்திரத்தை ஒரு நல்ல புதுப் பாத்திரமாக மாற்றி அமைக்க வல்லவராக இருக்கிறார் என் அருமை ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து.

மேலும் ஆண்டவர் கூறுகிற வார்த்தைகள். யோவேல் 2: 13-15 வரை "நீங்கள் உங்கள் வஸ்திரங்களையல்ல, உங்கள் இருதயங்களைக் கிழித்து, உங்கள் தேவனாகிய கர்த்தர் இடத்தில் திரும்புங்கள்; அவர் இரக்கமும், மன உருக்கமும், நீடிய சாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவர்; அவர் தீங்குக்கு மனஸ்தாபப்படுகிறவருமாயிருக்கிறார். ஒருவேளை அவர் திரும்பி மனஸ் தாபப்பட்டு, உங்கள் தேவனாகிய கர்த்தருக்குப் போஜன பலியையும் பான பலிகளையும் செலுத்துகிறதற்கான ஆசீர்வாதத்தைத் தந்தருளுவார். சீயோனிலே எக்காளம் ஊதுங்கள், பரிசுத்த உபவாச நாளை நியமியுங்கள், விசேஷித்த ஆசரிப்பைக் கூறுங்கள்." என்று. சங்கீதக்காரனாகிய தாவீது சொல்கிறார். சங்கீதம் 41:1-3 வரை "சிறுமைப் பட்டவன் மேல் சிந்தையுள்ளவன் பாக்கியவான்; தீங்கு நாளில் கர்த்தர் அவனை விடுவிப்பார். கர்த்தர் அவனைப் பாதுகாத்து அவனை உயிரோடு வைப்பார்; பூமியில் அவன் பாக்கியவானாயிருப்பான்; அவன் சத்துருக்களின் இஸ்டத்துக்கு நீர் அவனை ஒப்புக் கொடீர். படுக்கையின் மேல் வியாதியாய்க்கிடக்கிற அவனைக் கர்த்தர் தாங்குவார்; அவனுடைய வியாதியிலே அவன் படுக்கை முளுவதையும் மாற்றிப்போடுவீர்." என்று சொல்லிவிட்டு சங்கீதம் 121: 5-8 வரை சொல்கிறார். "கர்த்தர் உன்னைக் காக்கிறவர்; கர்த்தர் உன் வலது பக்கத்திலே உனக்கு நிழலாயிருக்கிறார். பகலிலே வெய்லாகிலும், இரவிலே நிலவாகிலும் உன்னைச் சேதப்படுத்துவதில்லை. கர்த்தர் உன்னை எல்லாத் தீங்குக்கும் விலிக்கிக் காப்பார்; அவர் உன் ஆத்துமாவைக் காப்பார். கர்த்தர் உன் போக்கையும் உன் வரத்தையும் இது முதற் கொண்டு என்றைக்கும் காப்பார்." என்று தான் பெற்றுக் கொண்ட நன்மைகளைக் குறித்துச் சொல்லுகிறார்.

எனக்கு அன்பான பிள்ளைகளே! ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து சொல்கிறார். "சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும்." (யோவான் 8:32) ஆதலால் உங்கள் வாழ்க்கையில் பிரச்சனைகள், வியாதிகள், மலைபோல் உள்ள கடன் தொல்லைகளிலிருந்து விடுதலை பெற வேண்டுமாயின் ஆண்டவருடைய தேவ சந்நிதிக்கு வாருங்கள் அவர் உங்களை ஆசீர்வதிப்பார். ஆமென்

## (14) இருளில் இருந்து வெளிச்சத்தைப் பிரகாசிக்கச் சொன்ன தேவன்

(2 கொரி 5:6)

சகோதரி நகோமி எலிசா லோகன்.

அன்பரின் நாமத்தில் வாழ்த்துக்கள். "கிருபையினாலே விசுவாசத்தைக் கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள்; இது உங்களால் உண்டானதல்ல, இது தேவனுடைய ஈவு." (எபே 2:8) தேவனுடைய அளவற்ற கிருபையை, விசுவாசத்தைக் கொண்டுதான் பெற்றுக் கொள்ள முடியும். அன்புக் குரியவர்களே! கிருபை கொடுக்கிறது, விசுவாசம் எடுத்துக் கொள்கிறது. ஆதாம் ஏதேன் தோட்டத்திலே தேவன் கொடுத்த விடுதலையை, மீட்பை, ஆசீர்வாதத்தை இழந்துவிட்ட வேளையிலே பிந்தின ஆதாமாகிய ஆண்டவராகிய இயேசுக் கிறிஸ்து மனிதனுடைய பிரதிநிதியாக வந்து மனித குலத்துக்காக தனது இரத்தத்தைச் சிந்தி தனது சரீரத்தை கல்வாரிச் சிலுவையிலே ஒப்புக் கொடுத்து, மனிதன் இழந்த உரிமையை, அதிகாரத்தை, விடுதலையை, மீட்பை பெற்றுக் கொடுத்தார். இந்தக் கிருபையை மனிதன் பெற்றுக் கொள்ள மனிதன் செய்ய வேண்டியது என்ன? நாம் அவரை முழுமையாக ஏற்றுக் கொள்வது தான் நாங்கள் செய்ய வேண்டிய காரியம்.

"கிறிஸ்து இயேசுவுக்குள் அவர் நம்மிடத்தில் வைத்த தயவினாலே, தம்முடைய கிருபையின் மகா மேன்மையான ஐசுவரியத்தை வருங்காலங்களில் விளங்கச் செய்வதற்காக, கிறிஸ்து இயேசுவுக்குள் நம்மை அவரோடேகூட எழுப்பி, உன்னதங்களிலே அவரோடேகூட உட்காரவும் செய்தார்." ( எபே 2:6,7) பாருங்கள் தமது கிருபையின் மகாமேன்மையான ஐசுவரியத்தை நமக்கு வெளிப்படுத்துவதற்காக, எங்களை இயேசுவோடே கூட எழுப்பி, உன்னதங்களிலே அவரோடே கூட உட்காரவும் செய்தார். கிருபை நமக்கு எல்லாவற்றையும் கொடுக்கிறது. விசுவாசம் அதைப் பெற்றுக் கொள்ள வேண்டும். கிறிஸ்தவ வாழ்க்கைக்கு விசுவாசம் அத்திபாரமாக இருக்கிறது. ஆகவே இந்த விசுவாசம் என்றால் என்ன என்று பார்ப்போம்.

எபிரெயர் 11:1 இல் "விசுவாசமானது நம்பப்படுகிறவைகளின் உறுதியும், காணப்படாதவைகளின் நிச்சயமுமாயிருக்கிறது." நம்பப்படுகிறவை களின் உறுதி என்றால் என்ன? அந்த உறுதி தான் விசுவாசம். உங்கள் சூழ்நிலைகளில் தேவ வார்த்தைகளை விசுவாசிப்பீர்களாக இருந்தால் அதுவே விசுவாசம். காணப்படாதவைகளின் நிச்சயம் என்றால் நமது சூழ்நிலைகளில் தேவனுடைய வார்த்தைகளுக்கு முரண்பாடான காரியம் காணப்பட்டாலும் நமது சூழ் நிலையை தேவ வார்த்தை மாற்றும் என்று விசுவாசிப்பது விசுவாசம். ஆதனால் தான் வேதம் சொல்கிறது "விசுவாசம் இல்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது கூடாத காரியம்;" (எபிரெயர் 11:6)

(15) எபிரெயர் 11:2 இல் "அதினாலே முன்னோர்கள் நற்சாட்சி பெற்றார்கள்." என்று சொல்லப்படுகிறது. முன்னோர்கள் தேவனுடைய பிள்ளைகள் தங்கள் சூழ்நிலைகளில் தங்கள் விசுவாசத்தைக் கொண்டு தேவனுடைய விடுதலையை, மீட்பை, பதிலை சுதந்தரித்துக் கொண்டாகள். நாமும் அவர்களின் மாதிரியைப் பின்பற்றி நமது வாழ்க்கையிலும் வெற்றியை சுதந்தரித்துக் கொள்வோம். "விசுவாசத்தினாலே நாம் உலகங்கள் தேவனுடைய வார்த்தையினால் உண்டாக்கப்பட்டதென்றும், இவ்விதமாய், காணப்படுகிறவைகள் தோன்றப்படுகிறவைகளால் உண்டாகவில்லையென்றும் அறிந்திருக்கின்றோம்." (எபி 11:3) தேவன் தன்னுடைய விசுவாசத்தையும் தன்னுடைய வார்த்தையையும் இருளிலே பிரயோகித்த வேளையிலே வெளிச்சம் வந்தது என்று ஆதி 1:3 இல் பார்க்கிறோம். அதே போல தேவ தாசர்களின் வாழ்க்கையிலே அவர்கள் ஜெயத்தைப் பெற்றுக் கொண்ட சம்பவங்களை நாம் பார்ப்போம்.

<u>**எலிசா**</u> 2 இராஜா 6: 10,11 இல் "அப்பொழுது இஸ்ரவேலின் ராஜா தேவனுடைய மனுஷன் (எலிசா) தன்னை எச்சரித்து, தனக்குக் குறித்துச் சொன்ன ஸ்தலத்துக்கு மனுஷரை அனுப்பிப் பார்த்து எச்சரிக்கையாயிருந்து, இப்படி அனேகம் தரம் தன்னைக் காத்துக் கொண்டான். இந்தக் காரியத்தினிமித்தம் சீரிய ராஜாவின் இருதயம் குழம்பி, அவன் தன் ஊழியக்காரரை அழைத்து; நம்முடையவர்களில் இஸ்ரவேலின் ராஜாவுக்கு உளவாயிருக்கிறவன் யார் என்று நீங்கள் எனக்கு அறிவிக்கமாட்டீர்களா என்று கேட்டான்." பாருங்கள் எலிசா என்கிற தேவ மனுஷன் எதிரிகளான சீரியருடைய தந்திரங்களை அறிந்து இஸ்ரவேலின் ராஜாவுக்கு வெளிப்படுத்தி இஸ்ரவேல் ராஜாவை ஒவ்வொரு தடவையும் தப்புவிக்கிறார். இதனால் இஸ்ரவேல் ராஜா எலிசாவை பிடிக்க வகைதேடுகிறான். ஒருநாள் குதிரைகளையும், இராணுவத்தையும் எலிசாவுக்கு விரோதமாக அனுப்புகிறான். "தேவனுடைய மனுஷனின் வேலைக்காரன் அதிகாலமே எழுந்து வெளியே புறப்படுகையில், இதோ, இராணுவமும் குதிரைகளும் இரதங்களும் பட்டணத்தைச் சுற்றிக் கொண்டிருக்கக் கண்டான்; அப்பொழுது வேலைக்காரன் அவனை நோக்கி; ஐயோ, என் ஆண்டவனே, என்ன செய்வோம் என்றான்." (2ராஜா 6: 15) "அதற்கு அவன்; பயப்படாதே; அவர்களோடிருக்கிறவர்களைப்பார்கிலும் நம்மோடிருக்கிறவர்கள் அதிகம் என்றான்." (2 ராஜா 6:15) அதுமட்டுமல்ல எலிசா வேலைக்காரனுடைய கண்களைத் திறக்கும் படி தேவனிடத்தில் வேண்டுதல் செய்கிறான். "...... உடனே கர்த்தர் அந்த வேலைக்காரன் கண்களைத் திறந்தார்; இதோ, எலிசாவைச் சுற்றிலும் அக்கினிமயமான குதிரைகளாலும் இரதங்களாலும் அந்த மலை நிறைந்திருக்கிதை அவன் கண்டான். அவர்கள் அவனிடத்தில் வருகையில், எலிசா கர்த்தரை நோக்கி விண்ணப்பம் பண்ணி; இந்த ஜனங்களுக்குக் கண்மயக்கம், உண்டாகும்படி செய்யும் என்றான்;

(16) எலிசாவினுடைய வார்த்தையின்படியே அவர்களுக்குக் கண்மயக்கம் உண்டாகும்படி செய்தார்." (2 ராஜா 6: 17,18) ஆம் அன்புக்குரியவர்களே! தேவன் ஒரு போதும் கைவிடமாட்டார் என்கிற அசைக்க முடியாத விசுவாசத்தோடு எலிசா செயல் பட்டார். எதிரிகள் எலிசாவைத் தொடாத படி தேவன் காத்துக் கொண்டார்.

<u>பவுல்</u> பவுல் என்கிற தேவ மனுஷன் 2 கொரி 4: 1 இல் இப்படிக் கூறுகிறார். "இப்படிப்பட்ட ஊழியத்தை உடையவர்களாகிய நாங்கள் இரக்கம் பெற்றிருப்பதால் சோர்ந்து போகிறதில்லை." தொடர்ந்து "நாங்கள் எப்பக்கத்திலும் நெருக்கப்பட்டும் ஒடுங்கிப் போகிறதில்லை; கலக்க மடைந்தும் மனமுறிவடைகிறதுமில்லை; துன்பப்படுத்தப்பட்டும் கைவிடப் படுகிறதுமில்லை; கீழே தள்ளப்பட்டும் மடிந்து போகிறதில்லை. கர்த்தராகிய இயேசுவினுடைய ஜீவனும் எங்கள் சரீரத்திலே விளங்கும் படிக்கு, இயேசுவின் மரணத்தை எப்பொழுதும் எங்கள் சரீரத்தில் சுமந்து திரிகிறோம்." (2 கொரி 4: 8-10) ஆம் அன்பான தேவ பிள்ளைளே நெருக்கத்தின் மத்தியில் குறைவுகனின் மத்தியில் பவுலைப் பேல நாமும் தைரியமாக தேவ வார்த்தைகளைப் பேசும்போது தேவ வார்த்தைகள் நமக்கு தைரியத்தையும், பலத்தையும் தருவது மட்டுமல்ல நமது இருளான சூழ்நிலைகளிலும் மாற்றக்தைக் கொண்டுவருகிறது.

<u>தாவீது</u> தேவனுடைய தாசனாகிய தாவீது தேவனுடைய இருதயத்துக்கு உகந்தவனாகக் காணப்படுகிறான். தேவன் பேரில் அவன் வைத்திருந்த விசுவாசம் நம்மைப் பிரமிக்க வைக்கிறது. கோலியாத் என்கிற பெலிஸ்தன் தேவ பிள்ளைகளுக்கு விரோதமாக வருகிறான். "அவன் வந்து நின்று, இஸ்ரவேல் சேனைகளைப் பார்த்துச் சத்தமிட்டு, நீங்கள் யுத்தத்துக்கு அணிவகுத்து நிற்கிறது என்ன? நான் பெலிஸ்தன் அல்லவா? நீங்கள் சவுலின் சேவகர் அல்லவா? உங்களில் ஒருவனைத் தெரிந்து கொள்ளுங்கள், அவன் என்னிடத்தில் வரட்டும். அவன் என்னோடே யுத்தம் பண்ணவும் என்னைக் கொல்லவும் சமர்த்தனானால், நாங்கள் உங்களுக்கு வேலைக்காரராயிருப் போம்; நான் அவனை ஜெயித்து அவனைக் கொல்வேனானால், நீங்கள் எங்களுக்கு வேலைக்காரராயிருந்து, எங்களைச் சேவிக்கவேண்டும் என்று சொல்லி, பின்னும் அந்தப் பெலிஸ்தன்; நான் இன்றைய தினம் இஸ்ர வேலுடைய சேனைகளை நிந்தித்தேன்; நாம் ஒருவரோடு ஒருவர் யுத்தம்பண்ண ஒருவனை விடுங்கள் என்று சொல்லிக் கொண்டு வருவான்." (1 சாமு 17: 8-10) இப்படிப்பட்ட வார்த்தைகளைக் கேட்ட வேளையில் ராஜாவாகிய சவுலும் இஸ்ரவேலர் அனைவரும் பயப்பட்டார்கள். ஆனால் தாவீது சொல்கிறான் ஜீவனுள்ள தேவனுடைய சேனைகளை நிந்திக்கிறதுக்கு விருத்த சேதனம் இல்லாத இந்தப் பெலிஸ்தன் எம்மாத்திரம் என்கிறான். அதாவது கோலியாத் உடன்படிக்கை இல்லாதவன் என்று தாவீது அலட்சியம் பண்ணுகிறான். கோலியாத்துடன் யுத்தம் செய்யப் போன வேளையில்

(17) கோலியாத் தாவீதை சபிக்கிறான். அதுமட்டுமல்ல "…என்னிடத்தில் வா; நான் உன் மாம்சத்தை ஆகாயத்துப் பறவைகளுக்கும் காட்டு மிருகங்களுக்கும் கொடுப்பேன் என்றான்." (1 சாமு 17:44) "அதற்கு தாவீது; பெலிஸ்தனை நோக்கி; நீ பட்டயத்தோடும், ஈட்டியோடும், கேடகத்தோடும் என்னிடத்தில் வருகிறாய்; நானோ நீ நிந்தித்த இஸ்ரவேலினுடைய இராணுவங்களின் தேவனாகிய சேனைகளுடைய கர்த்தரின் நாமத்திலே உன்னிடத்தில் வருகிறேன். இன்றைய தினம் கர்த்தர் உன்னை என் கையில் ஒப்புக் கொடுப்பார்; நான் உன்னைக் கொன்று, உன் தலையை உன்னை விட்டு வாங்கி, பெலிஸ்தருடைய பாளயத்தின் பிணங்களை இன்றைய தினம் ஆகாயத்துப் பறவைகளுக்கும், பூமியின் காட்டு மிருகங்களுக்கும் கொடுப்பேன்; அதனால் இஸ்ரவேலின் தேவன் ஒருவர் உண்டு என்று பூலோகத்தார் எல்லாரும் அறிந்து கொள்வார்கள். கர்த்தர் பட்டயத்தினாலும் ஈட்டியினாலும் ரட்சிக்கிறவர் அல்ல என்று இந்த ஜனக்கூட்டமெல்லாம் அறிந்து கொள்ளும்; யுத்தம் கர்த்தருடையது; அவர் உங்களை எங்கள் கையில் ஒப்புக் கொடுப்பார் என்றான்." (1 சாமு 17: 45-47) ஆம் பிரியமான தேவனுடைய பிள்ளைகளே விசுவாச வார்த்தைகளை சொல்லியே தாவீது கோலியாத்தை முறியடித்தான். அவனுடைய பட்டயத்தாலேயே தாவீது கோலியாத்தை கொலை செய்கிறான். முழு தேவனுடைய ஜனங்களுக்கும் விடுதலையைக் கொண்டுவந்தான்.

<u>ஆபிரகாம்</u> ஆபிரகாம் என்கிற தேவனுடைய மனுஷன் தேவனால் அழைக்கப்படுகிறான். ஆபிரகாமுக்குப் பிள்ளைகள் இல்லை. குறைவும், நிந்தனையும், வேதனையுமான வாழ்க்கை. அவ்வேளையிலே ஆபிரகாமுக்கு தேவன் வாக்குத்தத்தம் கொடுக்கிறார். ஆதி 17: 2 இல் "……உன்னை மிகவும் திரளாய்ப் பெருகப் பண்ணுவேன்…" ஆதி 17: 4 இல் "……நீ திரளான ஜாதிகளுக்குத் தகப்பனாவாய்." ஆதி 17:6இல் "உன்னை மிகவும் அதிகமாய்ப் பலுகப் பண்ணி, உன்னிலே ஜாதிகளை உண்டாக்குவேன்; உன்னிடத்திலிருந்து ராஜாக்கள் தோன்றுவார்கள்." தேவன் கொடுத்த வாக்குத்தத்தத்தை ஆபிரகாம் விசுவாசித்தான். அது அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டது என்று வேதத்திலே பார்க்கிறோம். உபாகமம் 30: 19, இல் "…… ஆகையால், நீயும் உன் சந்நதியும் பிளைக்கும் படிக்கு, நீ ஜீவனைத் தெரிந்து கொள் என்று வேதம் போதிக்கிறது. தேவனுடைய வார்த்தைக்கு ஜீவனும் வல்லமையும் உண்டு. ஜீவனுள்ள வார்த்தைகளை நாங்கள் விசுவாசித்து நமது வாழ்க்கையில் அப்பியாசப்படுத்தும் போது நன்மைகளை நமது சூழ்நிலைகளில் நாம் காணமுடியும். "அநேக ஜாதிகளுக்கு உன்னைத் தகப்பனாக ஏற்படுத்தினேன் என்று எழுதியிருக்கிறபடி, அவன் தான் விசுவாசித்தவருமாய், மரித்தோரை உயிர்ப்பித்து, இல்லாதவைகளை இருக்கிறவைகளைப் போல் அழைக்கிறவருமாயிருக்கிற தேவனுக்கு முன்பாக நம்மெல்லாருக்கும் தகப்பனானான். உன் சந்ததி இவ்வளவாயிருக்கும் என்று சொல்லப்பட்டபடியே, தான் அநேக ஜாதிகளுக்குத் தகப்பனாவதை நம்புகிறதக்கு ஏதுவில்லாதிருந்தும், அதை

 நம்பிக்கையோடே விசுவாசித்தான். அவன் விசுவாசத்திலே பலவீனமாயிருக்கவில்லை; அவன் ஏறக்குறைய நூறு வயதுள்ளவனாயிருக்கும்போது, தன் சரீரம் செத்துப் போனதையும், சாராளுடைய கர்ப்பம் செத்துப் போனதையும் எண்ணாதிருந்தான். தேவனுடைய வாக்குத்தத்தத்தைக் குறித்து அவன் அவிசுவாசமாய்ச் சந்தேகப்படாமல், தேவன் வாக்குத்தத்தம் பண்ணினதை நிறைவேற்ற வல்லவராயிருக்கிறாரென்று முழு நிச்சயமாய் நம்பி, தேவனை மகிமைப்படுத்தி, விசுவாசத்தில் வல்லவனானான். ஆகையால் அது அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டது." (ரோமர் 4: 17-22) ஆம் ஆபிரகாம் தனது சூழ்நிலையை நம்புவதற்கு காரணங்கள் இல்லாதிருந்தும், தேவன் தனக்கு சொன்னபடி ஒரு சந்ததி உருவாகும் என்று விசுவாசித்தான். அந்தப்படியே ஏற்ற காலத்தில் ஒரு மகனைப் பெற்றுக் கொண்டான். தொடர்ந்து அவன் சந்ததி பெருக ஆரம்பித்தது.

ஆம் அன்புக்குரியவர்களே! யோவான் 10:10 படி இயேசு நமக்கு வாழ்வு கொடுக்க வந்தார். அந்த வாழ்வை நாம் பேசுவோம். வாழ்வு தருகின்ற வார்த்தைகளை உச்சரிப்போம். தேவன் நமது இருளான சூழ்நிலைகளை வெளிச்சமாக மாற்றுவார். **ஆமென்**

**வாழ்வு தரும் தேவ வார்த்தைகள்:**

**வியாதிக்காக உச்சரிக்க வேண்டியவைகள்:**

ஏசாயா 53: 4,5 "மெய்யாகவே அவர் நம்முடைய பாடுகளை ஏற்றுக் கொண்டு, நம்முடைய துக்கங்களைச் சுமந்தார்; நாமோ, அவர் தேவனால் அடிபட்டு வாதிக்கப்பட்டு, சிறுமைப்பட்டவரென்று எண்ணினோம். நம்முடைய மீறுதல்களினிமித்தம் அவர் காயப்பட்டு, நம்முடைய அக்கிரமங்களினிமித்தம் அவர் நொறுக்கப்பட்டார்; நமக்குச் சமாதானத்தை உண்டுபண்ணும் ஆக்கினை அவர்மேல் வந்தது; அவருடைய தழும்புகளால் குணமாகிறோம்."

1 பேதுரு 2:24 "நாம் பாவங்களுக்குச் செத்து, நீதிக்குப் பிழைத்திருக்கும்படிக்கு, அவர் தாமே தமது சரீரத்திலே நம்முடைய பாவங்களைச் சிலுவையின் மேல் சுமந்தார்; அவருடைய தழும்புகளால் குணமானீர்கள்."

**பிள்ளைகளுக்காக:**

ஏசாயா 54:13 "உன் பிள்ளைகளெல்லாரும் கர்த்தரால் போதிக்கப்பட்டிருப்பார்கள்; உன் பிள்ளைகளுடைய சமாதானம் பெரிதாயிருக்கும்."

உபாகமம் 28:11 "உனக்குக் கொடுப்பேன் என்று கர்த்தர் உன் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்தில், கர்த்தர் உன் கர்ப்பத்தின் கனியிலும், உன் மிருகஜீவன்களின் பலனிலும், உன் நிலத்தின் கனியிலும் உனக்குப் பரிபூரண நன்மை உண்டாகக் கட்டளையிடுவார்."

(19) **கடனுக்காக:**

உபாகமம் 28:12 "ஏற்ற காலத்தில் உன் தேசத்திலே மழை பெய்யவும், நீ கையிட்டுச் செய்யும் வேலைகளெல்லாம் ஆசீர்வதிக்கவும், கர்த்தர் உனக்குத் தமது நல்ல பொக்கிஷ சாலையாகிய வானத்தைத் திறப்பார்; நீ அநேகம் ஜாதிகளுக்குக் கடன் கொடுப்பாய், நீயோ கடன் வாங்காதிருப்பாய்."

**குடும்பத்துக்காக:**

சங்கீதம் 128: 1-3 "கர்த்தருக்குப் பயந்து, அவர் வழிகளில் நடக்கிறவன் எவனோ; அவன் பாக்கியவான். உன் கைகளின் பிரயாசத்தை நீ சாப்பிடுவாய்; உனக்குப் பாக்கியமும் நன்மையும் உண்டாயிருக்கும். உன் மனைவி உன் வீட்டோரங்களில் கனிதரும் திராட்சக்கொடியைப்போல் இருப்பாள்; உன் பிள்ளைகள் உன் பந்தியைச் சுற்றிலும் ஒலிவமரக் கன்றுகளைப்போல் இருப்பார்கள்."

**சாபங்களுக்காக:**

கலாத்தியர் 3: 13 "மரத்திலே தூக்கப்பட்ட எவனும் சபிக்கப்பட்டவன் என்று எழுதியிருக்கிற படி, கிறிஸ்து நமக்காக சாபமாகி, நியாயப்பிரமாணத்தின் சாபத்துக்கு நம்மை நீங்கலாக்கி மீட்டுக் கொண்டார்."

**அன்புக்குரியவர்களின் இரட்சிப்புக்காக:**

அப்போஸ்தலர் 16:31 "......கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவை விசுவாசி, அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள்......"

சகரியா 9:11,12 "உனக்கு நான் செய்வதென்ன வென்றால், தண்ணீரில்லாத குழியிலே அடைபட்டிருக்கிற உன்னுடையவர்களை நான் உன் உடன்படிக் கையின் இரத்தத்தினாலே விடுதலை பண்ணுவேன். நம்பிக்கையுடைய சிறைகளே, அரணுக்குத் திரும்புங்கள்; இரட்டிப்பான நன்மையைத் தருவேன், இன்றைக்கே தருவேன்."

**ஆசீர்வாதங்களுக்காக:**

ஆதி 12:2, "நான் உன்னைப் பெரிய ஜாதியாக்கி, உன்னை ஆசீர்வதித்து, உன் பேரைப் பெருமைப் பொருமைப்படுத்துவேன்; நீ ஆசீர்வாதமாய் இருப்பாய்."

ஆதி 26:3 "இந்தத் தேசத்திலே வாசம்பண்ணு; நான் உன்னோடே கூட இருந்து, உன்னை ஆசீர்வதிப்பேன்; நான் உனக்கும் உன் சந்ததிக்கும் இந்தத் தேசங்கள் யாவையும் தற்து, உன் தகப்பனாகிய ஆபிரகாமுக்கு நான் இட்ட ஆணையை நிறைவேற்றுவேன்."

**ஆமென்**

## குணமாக்கும் தழும்புகள் கொண்டவரே

ஆண்டவருடைய பரிசுத்த நாமத்துக்கு ஸ்தோத்திரம் உண்டாவதாக!

எனக்கு சில மாதங்களாக காலில் ஒரே குத்து வலியாக இருந்தது. நடக்கும் போதும் இருக்கும் போதும் ஒரே வலியாக இருக்கும். வைத்தியரிடம் காட்டிய வேளையில் அதற்கு மாத்திரை தந்தார். ஒரு நாளைக்கு இரண்டு தரம் எடுக்க வேண்டும். ஐந்து ஆறு மாதங்கள் தொடர்ந்து எடுத்தேன். மருந்து எடுக்கும் போது வலி குறைவாக இருக்கும். மறந்துபோய் எடுக்காமல் இருக்கும் போது இரட்டிப்பான வலியாக இருக்கும். இதனாலே பயங்கரமாக உபத்திரவப் பட்டேன். இதனால் இருதயத்தில் ஒரு தீர்மானம் எடுத்தேன் இனி இதற்காக மருந்து எடுப்பதில்லை என்று. என் ஆண்டவராகிய இயேசுக் கிறிஸ்துவின் வார்த்தைகளை விசுவாசத்தோடு அறிக்கையிட்டு ஜெபிப்பது என்று. என் தேவனுடைய வார்த்தைகளை அறிக்கையிட ஆரம்பித்தேன், “நீரே என் பரிகாரியாகிய கர்த்தர்.” “நீர் என்னை விட்டு விலகுவதுமில்லை, நீர் என்னை கைவிடுவதுமில்லை.” “ஆபத்துக் காலத்தில் என்னை நோக்கிக் கூப்பிடு நான் உன்னை விடுவிப்பேன் நீ என்னை மகிமைப் படுத்துவாய்…” “பலத்தினாலுமல்ல பராக்கிரமத்தினாலுமல்ல என்னுடைய ஆவியினாலே எல்லாமாகும்.” “நாம் பாவத்துக்குச் செத்து நீதிக்குப் பிளைத்திருக்கும் படிக்கு, நீர் தாமே உமது சரீரத்திலே என்னுடைய பாவங்களைச் சிலுவையின் மேல் சுமந்தீர்; உம்முடைய தழும்புகளால் நான் குணமானேன் .” என்று என் இருதயத்தின் ஆழத்திலிருந்து அறிக்கையிட்டு கண்ணீரோடு ஜெபித்த வேளையில் என் தேவன் எனக்கு அற்புதமாக சுகம் தந்தார்.

நன்றி ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவுக்கு.

சகோதரி: திரேசா

## நானே உன் பரிகாரியாகிய கர்த்தர்

ஜெயம் கொடுக்கும் தேவனுக்கு ஸ்தோத்திரம். ஒரு வருடங்களுக்கு முன்பாக என் சகோதரியினுடைய கணவருக்கு கான்சர் வியாதி வந்தது. எங்கள் குடும்பத்தில் எல்லோருக்கும் பயம். என் சதோதரிக்கு ஒரே கவலை. அவர் Hospital லில் அனுமதிக்கப்பட்ட வேளையில் நானும் என் ஊழியக்காரரும் Hospital க்கு போய் தேவனுடைய வார்த்தையைச் சொல்லி ஜெபித்தோம். அவர் விசுவாசித்தாரோ இல்லையோ நாங்கள் விசுவாசத்தோடு ஜெபித்தோம். ஒருவருக்கும் நம்பிக்கை இல்லை என்ன நடக்குமோ என்று எல்லோருடைய மனமும் போராட்டம். இதற்கு மத்தியிலே என் தேவனுடைய வார்த்தை இப்படிச் சொல்கிறதென்று அவர்களுக்கு தேவனுடைய வார்த்தைகளைக் காண்பித்தேன். ஒருவரும் ஒன்றுமே சொல்லவில்லை. கான்சர் வந்து தப்பினவர்கள் ஒருவரும் இல்லை என்பது அவர்களின் தீர்மானம்.

(21) கான்ஷர் வியாதிக்கு வைத்தியம் Hospital லில் நடந்தது. இந்த வைத்தியம் நடந்தது கொண்டிருந்த வேளையிலே அவர்கள் வீட்டுக்குப் போயிருந்தேன். அப்பொழுது அங்கே அவருடைய சகோதரியும், தாயாரும் அழுது கொண்டு இருந்தார்கள். சகோதரி சென்னார்கள் அண்ணன் இப்படி மெலிந்து இருக்கிறார். உரு தெரியாத அளவுக்கு மெலிந்திருந்தார். நான் அந்தச் சகோதரிக்குச் சொன்னேன் ஆண்டவருடைய வார்த்தை இப்படிசொல்கிறது, "உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக, தேவனிடத்தில் விசுவாசமாயிருங்கள் என்னிடத்திலும் (இயேசுவிடத்திலும்) விசுவாசமாயிருங் கள். உங்கள் கவலைகளை அவர்மேல் (இயேசுமேல்) வைத்து விடுங்கள்." அவருக்கு ஒன்றும் நடக்காது, உங்கள் இருதயம் கலங்கவேண்டாம். நிச்சயமாக நான் ஆராதிக்கிற தேவன் அவருக்குச் சுகம் கொடுப்பார். ஏனென்றால் என் தேவன் பொய் செல்ல ஒரு மணிதன் அல்ல, மனம் மாற அவர் ஒரு மனுபுத்திரனுமல்ல. அவர் சொல்லியும் செய்யாதிருப்பாரோ, வசனித்தும் கேளாதிருப்பாரோ." "தண்ணீர் இல்லாத குழியிலே அடைபட்டி ருக்கிற உன்னுடையவர்களை, உன் உடன் படிக்கையின் இரத்தத்தினால் மீட்டுக் கொள்வேன்." "பெலத்தினாலுமல்ல பராக்கிரமத்தினாலுமல்ல உம் முடைய ஆவியினாலே எல்லாம் ஆகும். என் இருதயத்தில் வலி உண்டாகிற போதெல்லாம் இந்தவார்த்தைகளை திரும்பத் திரும்ப என் கையினாலே திரும்பத் திரும்ப எழுதுவேன்.

தொடர்ந்து ஜெபித்துக் கொண்டே இருந்தேன், இயேசுவே என் அத்தான் உம்முடைய தழும்புகளால் குணமானார் என்று. "பராக்கிரமன் கையிலிருந்து கொள்ளைப் பொருளைப் பறிக்கக்கூடுமோ? நீதியாயச் சிறைப்பட்டுப் போனவர்களை விடுவிக்கக்கூடுமோ? என்றாலும் இதோ, பராக்கிரமனால் சிறைப்படுத்தப்பட்டவர்களும் விடுவிக்கப்படுவார்கள்; பெலவந்தனால் கொள்ளையிடப்பட்டதும் விடுதலையாக்கப்படும்." என்று நான் விசுவாசத்தோடு அறிக்கையிட்டேன். என்னுடைய தேவனின் வார்த்தை யின்படி அவருக்குப் பூரண சுகம் கொடுத்தார். அவர் இன்று நல்ல சுகபெலத் தோடு வாழ்ந்து கொண்டு இருக்கிறார். என் அருமையான ஜனங்களே! உங்கள் வாழ்க்கையில் எப்படிப்பட்ட போராட்டமாயிருந்தாலும் இயேசுவிடத்தில் விசுவாசத்தோடு வாருங்கள், கேழுங்கள் நிச்சயமாக உங்கள் வாழ்க்கையில் ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து அற்புதம் செய்வார். ஆமென்.

சகோதரி சிவா சுமதி

"......பன்னிரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ளவளாயிருந்து, தன் ஆஸ்திகளையெல்லாம் வைத்தியர்களுக்குச் செலவழித்தும், ஒருவனாலும் சொஸ்தமாக்கப்படாதிருந்த ஒரு ஸ்திரீ, அவருக்குப் பின்னாக வந்து, அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாள்; உடனே அவளுடைய பெரும்பாடு நின்று போயிற்று." (லூக்கா 8: 43,44)



# A Father's Love

Greeting in the name of the Father, the Son, and the Holy Spirit. I ask of God to bless you with good health and long life, to bless your household and everything you own, and rich abundant blessings to pour down upon you from Heaven.

How much does your Father in Heaven love you? When there is no end to your problems, do you cry out to Him, "Abba! Abba! (Father! Father)" like Jesus did once long ago? You may see what your eyes observe, but you may not accept what your soul understands. Your eyes and mind work in either a positive or negative manner. You want comfort from people. You want the attention to satisfy your aching heart. This search is never-ending, but you want more attention. You cover your pain and agony, but all the while, the pain is tucked away, making you suffer more. This Earthly attention is limited; we need to realize that OUR Father, God, has erased all of our pains, sufferings, and most importantly, all of our sins through the blood of the Lamb, Jesus Christ. Prior to asking for help from those near you, ask God. In the name of your Lord and Saviour, command all negativity to be realised from your heart, mind, and soul, but instead bring forth peace, John 14:14.

"Love suffers long *and* is kind; love does not envy; love does not parade itself, is not puffed up; does not behave rudely, does not seek its own, is not provoked, thinks no evil; does not rejoice in iniquity, but rejoices in the truth; bears all things, believes all things, hopes all things, endures all things," 1 Corinthians 13: 4-7. Jesus is the ultimate Love sent to us by our Father God. This love saved everyone. This Love humbled Himself to release us from the Earthly binds. By this Love, we were already set free and now we receive the precious gift of blessing from OUR Father. With Christ being our greatest example, we need to be like Him. In return, we need to show Him our gratification and love. When we do not receive a simple "thank you" when we show kindness and love to

another, we tend to feel hurt. Our Father God wants us to thank Him. For God is good! All the time! Our lives will change for the better.

Love must rest in our hearts. We must support and encourage one another through difficulties and blessings. My family consists of three children and two parents, living under the same household. God has united us into one “temple” to serve Christ together, 1 Corinthians 6:19-20. My parents give and show us an Earthly love, given to us by the guidance of God, to direct us in worldly and spiritual choices. How much more can your Father, God, supply you? How much love and guidance will He shower upon you? When you accept God into your life, God will exalt you above, James 4:10. Our hearts will open up to Love, and that Love will radiate beyond our realm of faith to influence those who are around us.

“For God so loved the world that He gave His only begotten Son, that whoever believes in Him should not perish but have everlasting life,” John 3:16. God loves and cares for you so much that He gave you His one and only Son; so that in order to live eternally our sins were washed by Christ’s blood on the cross. “...You were bought at a price...” 1 Corinthians 6:20. His blood did not cover your pain, but the precious Blood washed away your sins, your agony, and your discomfort. Now you are “clean” to live your life for and in Him. The Prophet Isaiah prophesises in the Book of Isaiah fifty-three, telling us, “He was crushed, beaten, and agonized, but He did not open His mouth.” (A prophesy is an event that looks into the future, and that event comes true.) For whom? Only for you and I! Jesus was sent to us to cleanse us of any negativity; including to forgive us of our sins. If God can forgive us of our sins and love us, then you can forgive others and love them. You do not need to worry about tomorrow, for God will take care of your burdens and needs. Call upon him, “Abba, Abba (Father, Father)” and ask Him to take care of you, (Psalms 55:22). Accept the love that your Father poured out for you, and give thanks.

God always watches over His Children, and you ARE His child, Galatians 3:26. “...faith work[s] through love...” Galatians 5:6. You need to place your faith (belief) in Him, and let God do the rest. Let God know that you trust Him, and you are willingly giving your heart to Him. “Cast your burden on the LORD, And He shall sustain you; He shall never permit the righteous to be moved,” Psalms 55:22. Your faith determines how much you will receive from God. Are you persistent in prayer? Do you meditate day and night and think about God’s laws, Joshua 1:8/Psalms 1:2. When obstacles come your way to test your faith in God,

will you be ready with God's Words of Life? Follow the Armour of God, Ephesians 6:10-16, to protect you through every battle. "Then all this assembly shall know that the LORD does not save with sword and spear; for the battle *is* the LORD's, and He will give you the enemy into your hands," 1 Samuel 17:47). God will take away your battle in seconds, but you need to prove to Him that He is your Lord and Saviour, that you truly love Him, and that He is your only redeemer. The Father's love for His child is so mighty; He does not want you to hurt, but to help and care for you; His Words will fight for you and cherish you, always.

Keep in mind that Christ Jesus came down to Earth with a purpose: to free us from the bondage of sin. Through the love of the Father in Heaven, a sacrifice was made on your behalf. – But Christ Jesus is not dead. Yes, He did die, but He resurrected three days after the people crucified Him. They did not believe that Jesus was the promised Messiah. This is the sign from God, to show you that God is the REAL God. Consider that awesome Love that is STILL being poured out to you. Be prepared for that Love and share it. Therefore, when you dread doctors, people, friends, family, work, or yourself, remember that all negative binds of sin, sorrow, and fear was destroyed at the cross two thousand years ago through the blood of Christ. Christ Jesus says at the cross, "For it is done." "Christ has redeemed us from the curse of the law," Galatians 3:13. Right away, you live the life of a blessed child of God because of this great revelation! Naturally, it is hard to bear different situations of daily tasks, and negative words from people, but take the first step, and be positive. Know the hidden truths of God's Word, and It shall make you free, John 8:32. Accept, appreciate, and seize the love that God, your Father, has given you.

First Corinthians 13, gives a layout of how love should work in you. Because God has given you His extended Love, should you not also extend your love upon others? Encourage one another; help those in need, give respect to all, and most of all, love God in return. He wants you, the child, to love Him, the Father, back. Praise Him with thanksgiving and instruments, and dancing and singing, (Psalms 150).

Stay strong and committed to the Word of God, and He will work miracles in your life. Love God, yourself, and others. Continue reading the Word of God. Remember to send in your prayer requests!

Your Sister in Christ Beulah Elisha Logan☺

# (25) ஆசீர்வாதத்துக்கு வழிகாட்டி விசுவாச அறிக்கைகள்

"...நீர் என்னை ஆசீர்வதித்தாலொழிய உம்மைப் போகவிடேன்..." (ஆதி 32:26) "...அவர் உன் அப்பத்தையும் உன் தண்ணீரையும் ஆசீர் வதிப்பார், வியாதியை உன்னிலிருந்து விலக்குவேன்." (யாத் 23:25)

"...யாக்கோபே, உன் கூடாரங்களும், இஸ்ரவேலே, உன் வாசஸ்தலங்களும் எவ்வளவு அழகானவைகள்.! அவைகள் பரவிப்போகிற ஆறுகளைப் போலவும், நதியோரத்திலுள்ள தோட்டங்களைப்போலவும், கர்த்தர் நாட்டின சந்தண மரங்களைப்போலவும், தண்ணீர் அருகே உள்ள கேதுரு விருட்சங்க ளைப் போலவும் இருக்கிறது." (எண் 24:5,6)

"இதோ, ஆசீர்வதிக்கக் கட்டளை பெற்றேன்; அவர் ஆசீர்வதிக்கிறார், அதை நான் திருப்பக் கூடாது. யாக்கோபுக்கு விரோதமான மந்திரவாதம் இல்லை, இஸ்ரவேலுக்கு விரோதமான குறிசொல்லுதலும் இல்லை; தேவன் என்ன செய்தார் என்று கொஞ்சக் காலத்திலே யாக்கோபையும் இஸ்ர வேலையும் குறித்துச் சொல்லப்படும்." (எண் 23:20,21)

"உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களைப் பெருகப்பண்ணினார்; இதோ, இந்நாளில் நீங்கள் வானத்து நட்சத்திரங்களைப் போலத் திரளாயிருக்கிறீர்கள். நீங்கள் இப்பொழுது இருக்கிறதைப் பார்க்கிலும் ஆயிரமடங்கு அதிகமாகும் படி உங்கள் பிதாக்களின் தேவனாகிய கர்த்தர் உங்களுக்குச் சொல்லியபடியே உங்களை ஆசீர்வதிப்பாராக.." (உபா 1:11)

"உன் தேவனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரிக்கும்படி கொடுக்கும் தேசத்தில், உன்னை மேன்மேலும் ஆசீர்வதிப்பார். உன் தேவனாகிய கர்த்தர் உனக்குச் சொன்னபடி உன்னை ஆசீர்வதிப்பதினால், நீ அனேகம் ஜாதிகளுக்குக் கடன் கொடுப்பாய், நீயோ கடன் வாங்குவதில்லை; நீ அனேகம் ஜாதிகளை ஆளுவாய், உன்னையோ அவர்கள் ஆளுவதில்லை." (உபா 15:5,6)

"இன்று நான் உனக்கு விதிக்கிற உன் தேவனாகிய கர்த்தருடைய கட்டளைகளின்படியெல்லாம் செய்ய நீ கவனமாயிருக்கும்படிக்கு, அவர் சத்தத்துக்கு உண்மையாய்ச் செவிகொடுப்பாயானால், உன் தேவனாகிய கர்த்தர் பூமியிலுள்ள சகல ஜாதிகளிலும் உன்னை மேன்மையாக வைப்பார். நீ உன் தேவனாகிய கர்த்தரின் சத்தத்துக்குச் செவிகொடுக்கும்போது, இப்பொழுது சொல்லப்படும் ஆசீர்வாதங்களெல்லாம் உன் மேல் வந்து உனக்குப் பலிக்கும். நீ பட்டணத்திலும் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய்; வெளியிலும் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய். உன் கர்ப்பத்தின் கனியும், உன் நிலத்தின் கனியும், உன் மாடுகளின் பெருக்கமும், உன் ஆடுகளின் மந்தைகளுமாகிய மிருகஜீவன்களின் பலனும் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கும். உன் கூடையும், மாப்பிசைகிற உன் தொட்டியும் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கும். நீ

 வருகையிலும் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய், நீ போகையிலும் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய்." (உபா 28: 1-6)

"கர்த்தர் உன் களஞ்சியங்களிலும், நீ கையிடும் எல்லா வேலையிலும் உனக்கு ஆசீர்வாதம் கட்டளையிடுவார்; உன் தேவனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கும் தேசத்திலே உன்னை ஆசீர்வதிப்பார். நீ உன் தேவனாகிய கர்த்தரின் கட்டளைகளைக் கைக் கொண்டு, அவர் வழிகளில் நடக்கும்போது, கர்த்தர் உனக்கு ஆணையிட்ட படியே, உன்னைத் தமக்குப் பரிசுத்த ஜனமாக நிலைப்படுத்துவார். அப்பொழுது கர்த்தருடைய நாமம் உனக்குத் தரிக்கப்பட்டது என்று பூமியின் ஜனங்களெல்லாம் கண்டு, உனக்குப் பயப்படுவார்கள்." (உபா 28: 8-10)

"ஏற்றகாலத்தில் உன் தேசத்திலே மழை பெய்யவும், நீ கையிட்டுச் செய்யும் வேலைகளையெல்லாம் ஆசீர்வதிக்கவும், கர்த்தர் உனக்குத் தமது நல்ல பொக்கிஷ சாலையாகிய வானத்தைத் திறப்பார்; நீ அநேகம் ஜாதிகளுக்குக் கடன் கொடுப்பாய், நீயோ கடன் வாங்காதிருப்பாய்." (உபா 28:12)

"கர்த்தரால் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் பூமியைச் சுதந்தரித்துக் கொள்வார்கள்;..." (சங் 37:22)

"...கர்த்தருக்குப் பயந்து, அவருடைய கட்டளைகளில் மிகவும் பிரிய மாயிருக்கிற மனுஷன் பாக்கியவான். அவன் சந்ததி பூமியில் பலத்திருக்கும், செம்மையானவர்களின் வம்சம் ஆசீர்வதிக்கப்படும்." (சங் 112: 1,2)

"கர்த்தர் நம்மை நினைத்திருக்கிறார், அவர் ஆசீர்வதிப்பார்; இஸ்ரவேல் குடும்பத்தாரை ஆசீர்வதிப்பார், அவர் ஆரோன் குடும்பத்தாரை ஆசீர்வதிப்பார். கர்த்தருக்கு பயப்படுகிற பெரியோரையும் சிறியோரையும் ஆசீர்வதிப்பார். கர்த்தர் உங்களையும் உங்கள் பிள்ளைகளையும் வர்த்திக்கப் பண்ணுவார். வானத்தையும் பூமியையும் படைத்த கர்த்தராலே நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்." (சங் 115: 12,15)

"இதோ, கர்த்தருக்குப் பயப்படுகிற மனுஷன் இவ்விதமாய் ஆசீர்வதிக்கப்படுவான். கர்த்தர் சீயோனிலிருந்து உன்னை ஆசீர்வதிப்பார்; நீ ஜீவனுள்ள நாளெல்லாம் எருசலேமின் வாழ்வைக் காண்பாய். நீ உன் பிள்ளைகளின் பிள்ளைகளையும், இஸ்ரவேலுக்கு உண்டாகும் சமாதானத் தையும் காண்பாய்." சங் 128:4-6)

"கர்த்தருடைய நாமத்தினாலே வருகிறவர் ஸ்தோத்தரிக்கப்பட்டவர்; கர்த்தருடைய ஆலயத்திலிருந்து (சத்தியவேத திருச்சபையிலிருந்து) உங்களை ஆசீர்வதிக்கிறோம்." (சங் 118: 26)

**"விழித்திருங்கள், விசுவாசத்திலே நிலைத்திருங்கள்,..." (1 கொரி 16:13)**

## சத்திய வேத திருச்சபையின் ஆராதனை ஒழுங்குகள்

- செவ்வாய்க் கிழமைகளில் மாலை 6:30 மணிக்குஜெபமும் வேதப்படிப்பும்: 250 Warden Ave.
- சனிக்கிழமைகளில் காலை 9.30 மணிக்கு ஜெபக்கூட்டம் 1262 Bloor St. West (Lansdowne & Bloor)
- ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 10:00 மணிக்கு சிறுவர்களுக்கு, பெரியவர்களுக்கான வேதப்படிப்பு 11:00 மணிக்கு தியான ஆராதனை. 250 Warden Ave.
- ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை 3:00 மணிக்கு தியான ஆராதனை 3638 Lawrence Ave East
- விழிப்பு இரவு ஜெப ஆராதனை மாதத்தின் முதல் வெள்ளிக்கிழமை இரவு 10:30 மணிக்கு 250 Warden Ave.
- மாதத்தின் முதல் ஞாயிறு காலை, மாலை ஆராதனையில் திருவிருந்து பரிமாறப்படும்.

# வல்லமையின் அலைகள்
# ரேடியோ இன்ரனற் நிகழ்ச்சி

## WAVES OF POWER

Tamil Gospel Internet Radio

24hrs a day 7 days a week Listeners from all over world

சத்தியவேத திருச்சபையின் காலை ஆராதனை

பிரதி ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 10:00 மணி தொடக்கம் மதியம் 1:00 மணிவரை நேரடி ஒலிபரப்பைக் கேட்கத் தவறாதீர்கள்

**WWW . WAVESOFPOWER . COM**

## சத்தியவேத திருச்சபை Scarborough

ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 10:00 மணிக்கு

சிறுவர்களுக்கான ஓய்வு நாள் பாடசாலையும்,

வாலிபர்களுக்கான வேதப்படிப்பும்,
பெரியவர்களுக்கான வேதப்படிப்பும்,
காலை 10:45 மணிக்கு தியான
ஆராதனையும் நடைபெறும்.

இடம்:
**250 Warden Ave. (Warden & Kingston)**

## சத்தியவேத திருச்சபை Scaborough

ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை 3.00 மணிக்கு
தியான ஆராதனை.

இடம்:
**3638 Lawrence Ave East.**

**(Markham & Lawrence)**